நாடகத்தலைமை ஆசிரியர் ஸ்ரீலஸ்ரீ

டி. டி. சங்கரதாஸ் சுவாமி அவர்கள் இயற்றிய

# வள்ளி திருமணம்






மதுரை புக்ஷாப்

## மு. கிருஷ்ணபிள்ளை

அவர்களால் வெளியிடப்பெற்றது

1934 [விலை 0—6—0

நாடகத்தலைமை ஆசிரியர்

ஸ்ரீலஸ்ரீ

டி. டி. சங்கரதாஸ் சுவாமி

அவர்கள் இயற்றிய



# வள்ளி திருமணம்.

மு. கிருஷ்ண பிள்ளை,

அவர்களால்

வெளியிடப்பெற்றது

காப்பிரைட்] 1934 [விலை 0-6-0

# முன்னுரை

ஒரு கதையின் வரலாற்றைத் திரை, நடை, உடை பாவனையாலும், இனிய கீதத்தாலும் இடத்திற்குத் தகுந்தபடி வசனத்துடனும், முதுமொழிகளுடனும், நடத்தப்படுவதே நாடகம்.

கலியுகவரதனாய், அவதரித்திருக்கும் சாக்ஷாத் ஸ்ரீ சிவசுப்பிரமணியக்கடவுள் வள்ளியம்மையை மணந்த பிரதாபத்தை, நம் தமிழ்மக்கள் யாவருங்கேட்டு ஆனந்திக்குமாறு, பெரும் புகழ் வாய்ந்த இக்கதையை நாடகமாக நடத்திப்பார்த்து மகிழுமாறு இடத்திற்கேற்றவாறு புதிய வர்ணமெட்டுகளைத் திரட்டியெடுத்து பாட்டுக்களை வரைந்துளேன்.

இதிலுள்ள பாடல்கள் முற்றிலும் நிறைந்த அழகுவாய்ந்தவை யென்பது நான் கூறுமலே நன்குவிளங்கும்.

தங்கள் அன்பன்
தூ. தா. சங்கரதாஸ்,
நாடக ஆசிரியன்.

## நாடகப் பாத்திரங்கள்.

1. நம்பிராஜன்—சித்தூர்மன்னன்.
2. நங்கைமோகினி—நம்பிராஜன் மனைவி
3. வள்ளியம்மை—வள்ளிக்கிழங்கு வெட்டிய இடத்திற் கிடைத்தவள்.
4. நம்பிராஜன்—புத்திரர்கள்
5. நாரதர்—பிரமபுத்திரன்.
6. ஸ்ரீசுப்பிரமணியர்—சிவபெருமானது 2-வது புத்திரர்.
7. விநாயகர்—சிவபெருமானது 1-வது புத்திரர்.

நிகழிடம்—சித்தூர், கழுகுமாமலை.

இன்னும் வேடர்கள், சகிகள், குடிகள்.

---

## அடையாளப் பாத்திரங்கள்.

1. நம்—நம்பிராஜன்.
2. நங்—நங்கை மோகினி.
3. புத்—புத்திரன்.
4. வள்—வள்ளியம்மை.
5. நார—நாரதர்.
6. சுப்—சுப்பிரமணியர்.
7. வே—வேடன்.
8. கிழ—கிழவர்.
9. சகி—வள்ளியம்மையின் தோழி.
10. விநா—விநாயகர்.
11. குடி—குடிகள்.

---

உ

ஸ்ரீலஸ்ரீ

டி. டி. சங்கரதாஸ் சுவாமி அவர்கள் இயற்றிய

# வள்ளி திருமணம்.

## 1-வது களம்.

### வேள்விமலைப்பொழில் சித்தூர்நாடு.

### நம்பிராஜன் சபை.

மானே நானும் சமர் செய்ய—என்ற மெட்டு.

நம். ஐங்கரனே சங் கரனறு முகனே
பொங்கு வர மருள் தாருஞ் சண்முகனே
சங்கையாகவே தினம் இரு கரங் குவித்தேன்
எங்கு மருள் புகழ் தங்குந் தமிழ் முதல் (ஐ)

சேவகா! எனது புத்திரர்களை அழைத்துக்கொண்டு வா.
[சேவகன் சென்றுவிட்டான்]

[நம்பிராஜன் புத்திரர் வருகிறார்கள்]

---

கோச்சிமலை குடகுமலை—என்ற மெட்டு.

புத். இந்தமலை அந்தமலை எங்குஞ்சுற்றி வந்தோம்
தந்தை-யழைத்ததினால் மகிழ்ந்தோம்
கந்தப்பனின் சொந்தமான கழுகுமாமலை வந்தோம் (இ)

ஆறுதலை வேலன்மீது பாட்டுக்களைப் பாடி
அவன்-புகழையுங்கொண் டாடி
சிற்-றாரதுக்குச் செல்வோஞ்செந்தில் அப்பன்
மீது பாடி (ஆ)

---

(நம்பிராஜனிடம்)

புத். தந்தையே! நமஸ்காரம்.

நம். புத்திரர்களே! அமருங்கள்.

நம். புத்திரர்களே! நமது குலதெய்வமாகிய ஆறுமுகக் கடவுளைத் துதிசெய்வோம் வாருங்கள்.

## முருகனைத் துதித்தல்.

சோதரரே வருவீர்—என்ற மெட்டு.

இராகம்—ஆனந்தபைரவி – தாளம்—ஆதி.

பல்லவி.

புத். வா அறுமுகனே வா
தருணம் முருகா
திருமால் மருகா
நீல-மயில் மிசை ஏறியே (வா)

அநுபல்லவி.

பார்புகழ் மகிழும் பாலவடி வேலவா
நேரம் வந்தருள்செய் கோலா கல முடனே
பார் புதல்வர்களைக்
கார் உனையல்லாது
யார் உயர்நலமுட னருள்தர (வா)

---

நம். புத்திரர்களே! நமது நாட்டிலுள்ள சகலரும் இவ்வாறு அந்த அறுமுகனை அனுதினமும் அவாவுடன் பூஜித்து வருகின்றார்களா?

புத். பிதா! அவ்விதமே செய்து வருகிறார்கள்.

## குடிகள் முறையிடுதல்.

மகானுபாவனே என்ற மெட்டு.

குடி. ராஜாதி ராஜனே குறைதீரும் நேசனே
மோசஞ் செய்த நாசமுற்றும்செல்வோம்ராஜனே (ரா)

துஷ்ட மிருகங்கள் நாங்களிட்ட பயிர்தனை
நஷ்டமாக்கி கஷ்டப்பட செய்தவேதனை (து)

கூட்டமாய் வந்தோம் குறைகேட்கத்துணிந்தோம்
பாட்டமான மிருகமதனை வாட்டவேபணிந்தோம் (கூ)

விரட்டிடாவிடில் வீட்டில் வசிப்பதே கஷ்டம்
நாட்டிலுள்ள எங்கள்குறை தீர்ப்பீருமதிஷ்டம் (வி)

ஐயா! நாங்களிட்ட பயிர்களை எல்லாம், காட்டிலுள்ள துஷ்ட மிருகங்கள் வந்து அழித்து நாசப்படுத்திவிட்டன. ஆகையால் எங்கள் மீது கிருபைசெய்து எங்கள் குறையைத் தீர்க்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

நம். குடிகளே! நீங்கள் சென்று வாருங்கள். நாங்கள் சென்று வேட்டையாடி உமது குறையைத் தீரும்படி செய்கிறோம். சென்று வாருங்கள்.

[குடிகள் சென்றுவிட்டார்கள்]

நம். புத்திரர்களே! நாம் வேட்டையாட வேண்டியதிருப்பதால், நீங்கள் சென்று, அதற்கு வேண்டிய சகலவிதமான ஆயுதங்களுடன் வந்து சேருங்கள்.

புத். உத்திரவின்படியே செய்து வருகிறோம்.

நம். சென்று வாருங்கள்.

[புத்திரர்கள் சென்றுவிட்டார்கள்.]

## 2-வது களம்.

காடு.

இராகம்-சுருட்டி. தாளம்-ஆதி

பல்லவி.

நம். வில்லை எடுத்து வாடா
அடடா வேடா
வில்லை எடுத்து வாடா (வி)

அநுபல்லவி.

எல்லையில் லாதபல தொல்லை மிருகங்கூடி
புல்லைமேய்ந் ததுபோக நெல்லை யழித்ததடா (வி)

---

(ஓடாதே நில்லு நில்லு.)

நம். சிங்கத்தைக் கொல்லு கொல்லு
சீக்கிர மாகவெல்லு
யானையைக் கண்டால் நில்லு
மானைக்கண் டாலுஞ் சொல்லு (சி)

---

புத்திரர்களே! யானை, மான், இந்த இரண்டு இனங்களைத் தவிர மற்ற மிருகங்களை யெல்லாம் கொல்லுங்கள். சற்று அமர்ந்திருக்கிறேன்.

புத். பிதா! அடுத்த காட்டில் ஏதோ இரைச்சல் கேட்கிறது. அங்கு சென்று வேட்டையாடி விட்டு வருகிறோம்.

நம். அப்படியே செய்யுங்கள். விடைதந்தேன்! சென்று வாருங்கள்.

[புத்திரர்கள் சென்றுவிட்டார்கள்.]

(ஒரு வேடன் ஓடிவந்து நம்பிராஜனிடம்)

ஐயனே! நாங்கள் வேட்டைமுடிந்ததும் வள்ளிக்கிழங்கு போட்டிருந்த தோட்டத்திற்குச் சென்றோம். வள்ளிக் கிழங்கு வெட்டிய இடத்தில் ஒரு சிறு பெண்குழந்தை ஒன்று அழுதுகொண்டிருக்கிறது.

நம். உண்மைதானா?

வேட. உண்மைதான்.

நம். வா, போய்ப் பார்க்கலாம்.

## 3-வது களம்.

## வள்ளிக்கிழங்குத் தோட்டம்.

நம். என்ன ஆச்சரியமாயிருக்கிறது! குழந்தையை என் கையில் எடுத்துத் தாருங்கள்.

[குழந்தையை வாங்கி முத்தமிடுகிறான்.]

எல்லாம் அந்த கந்தப்பனின்செயல். நமக்குப்பெண் குழந்தை இல்லையென்று அறிந்து இந்தப் பெண் பாக்கியத்தை அளித்தார் போலும். வாருங்கள். அரண்மனைக் குச் செல்லலாம்.

## 4-வது களம்.

## வேள்விமலைப் பொழில்.

[நங்கை மோஹினி]

நங். வேட்டைக்குச் சென்றவர்கள் இன்னும் ஏன் வரவில்லை? சேடியே நீ சென்று பார்த்துக்கொண்டுவா.

சேடி. அம்மணி! வெளியிற் சென்று பார்த்தேன், சமீபத்தில் வந்துவிட்டார்கள்.

நங். வந்துவிட்டார்களா?

[நம்பிராஜன் வந்துவிட்டான்.]

நங். நாதா! நமஸ்காரம்.

புத். தாயே! நமஸ்காரம்.

நம். ஏ காதலி! நாங்கள் வேட்டையாடிச் சென்றோம். வேட்டை முடிந்ததும் நமது மைந்தர்கள் வள்ளித் தோட்டத்திற்குச் சென்றார்களாம். வள்ளிக்கிழங்கு வெட்டிய இடத்தில் இந்தப் பெண் குழந்தை இருந்ததென்று தெரிவித்தார்கள். பின்னால் நான் சென்று இந்தக் குழந்தையை யெடுத்து வந்தேன். பெற்றுக்கொள்.

[குழந்தையை வாங்கி நங்கை மோகினி முத்தமிடுகிறாள்.]

மக்களா எந்தன் மக்களா—என்ற மெட்டு.

நங். கண்மணி! அருமைப் பெண்மணி

நம். காருண்யத் திருக் குமார னருளாலே
தோன்றிய பாவையே எந்தன் (கண்)

(குட்டியே பிரமனை சிறையினில்)

என்ற மாதிரி எடுத்துக்கொள்ளவும்.

நாங்கள் செய்தபாக்கிய வசத்தினால் எழுந்தாய்
நங்கை மோகினி முத்தம் தந்திட மகிழ்ந்தாய்
சங்கை யில்லா தவது வாகவே வந்தாய்
செங்கை யானவடி வேல னிங்கு உனை
மங்கை யாகவுரு அங்கஞ் செய்துவைத்த (கண்)

நங். ஏ கண்மணி! உன்னைப்பெற்ற பாக்கியமே பாக்கியம். எங்கள் துர்ப்பாக்கியம் இன்றோடு தொலைந்தது. புனிதவதியான நீயும் எங்களுக்குப் புத்திரியாக வரவேண்டுமானால் நாங்கள் அதிஷ்டசாலியே. மங்கையே உனக்கு என்ன வேண்டும் தெரிவி! பால் வேண்டுமா? பழம் வேண்டுமா?

நம். நங்கை மோகினி! நமது ஜென்மத்தை ஈடேற்ற வந்த எந்த னருமைக் கண்மணியைக் கண்ணின் கருவிழியைப் போல் பாதுகாத்து வரவேண்டும். ஆனால் நமது புத்திரிக்கு நாமதேயம் என்ன வைக்கலாம்?

நங். நீங்களே யோசித்துச் சொல்லுங்கள்.

நம். புத்திரர்களே! உங்களபிப்பிராயம் யாதோ?

புத். தங்களிஷ்டம்போல்தான்.

நம். காதலி! வள்ளிக்கிழங்கு வெட்டிய குழியிற் கிடைத்ததால் “வள்ளிக்கோடி” ஒன்றே நாமமிட்டேன்.

புத். அவ்வாறே அழைக்கிறோம்.

நம். கண்மணி! நான் சபாமண்டபம் சென்று வருகிறேன்.

நங். நாதா! சென்று வாருங்கள்.

[நம்பிராஜன் சென்றுவிட்டான்.]

---

## 5-வது களம்.

### நம்பிராஜன் சபை.

புத். தந்தையே! நமஸ்காரம்.

நம். புத்திரர்களே! உங்களை அழைத்தகாரணந் தெரியவருமா?

புத். தெரிவியுங்கள் தந்தையே!

நம். நமது தினைப்புனத்தில் கிளி, மைனா, புறா இவைகள் போன்ற பறவையினங்கள் வந்து முதிர்ந்த, கதிர்களைக் கொத்திக் கொத்தி நாசஞ் செய்கிறதாம். அதற்கு யாராவது ஒருவர் காவலிருக்கவேண்டும். அதற்கு யாரை அனுப்புகிறது?

புத். பிதா! அதற்கு நமது தங்கையாகிய வள்ளியைத்தான் அனுப்பவேண்டும். ஏனென்றால் அக்கம் பக்கங்களிலும் பெண்கள்தான் மிகுதியாய் காவல் செய்துகொண்டிருக்கிறார்கள். பெண்களுக்குப் பெண் துணையாகவிருக்கும். தாங்கள் அபிப்பிராயம் யாதோ?

நம். நீங்கள் உரைத்தவையும் சரிதான். அவ்வாறே செய்வோம். வள்ளிநாயகியை அழைத்துக்கொண்டு வாருங்கள்.

---

## வள்ளிநாயகி வருகிறாள்.

இராகம்—காம்போதி—தாளம்—ரூபகம்.

பல்லவி.

வள். கைலை நாதனே

அனுபல்லவி.

வேதா மாமலர்ப்பாதா பார்வதி நாதா கதிதரும் (கை)

சரணம்.

கங்கை மதியைச் சடையில் தரித்தோனே
மங்கை உமையாளை மாலை முடித்தோனே
பங்கய னுக்கருள் செய்த விநோதனே
பாரும் ஏழையைக் காரும் திருவருள் தாரும்
விடையேறும் (கை)

---

## நம்பிராஜன் சபை.

ஓய் நாரதரே—என்ற மெட்டு.

வள். பணிந்தேன் பிதா
இப்—பாவை வள்ளியா ளழைத்திடச் செய்ததை
ஏனோ சொல்வீர் பிதா (ப)

வள். தந்தையே! நமஸ்காரம்.

நம். மங்கள மே
மானே—வள்ளி நாயகியே உன்னை யழைத்ததும்
மொழிவேன் பைங்கிளியே (மா)

வசனம்

கண்மணி! வள்ளி உன்னை யழைத்த விபரம் தெரிவிக்கிறேன். அமருவாய்.

வள். தெரிவியுங்கள் பிதா.

முன்பாட்டின் தொடர்ச்சி.

நம். காட்டிற்கு நீ போக வேண்டும்
தினைப்—புனங் காவல் புரிந்திட வேண்டும்
மேட்டின்மே லேறியே கவண்கல்வி னாலோட்ட
செல்வாய் இத்தநியே (மா)

வ-ம். வள்ளி! நமது தினைப்புனத்தில் முதிர்ந்த கதிர்களை, பறவைகள் வந்து, கொத்திக்கொத்தி, நாசஞ் செய்கிறதென்று காவலாளிகள் வந்து, தெரிவித்தார்கள். ஆனதுபற்றி உன்னைத் தினைப்புனத்திற்கு காவலாளியாக அனுப்ப எண்ணங்கொண் டிங்கழைத்தேன். உன்னிஷ்டம் யாதோ தெரிவிப்பாய்!

வள். பிதா! தங்கள் கட்டளைப் பிரகாரம் செய்துவரச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் நான் அழைக்கும்போதெல்

லாம் எனது அண்ணன்மார்களும் தாங்களும் வந்து பார்த்துவிட்டுப் போகவேண்டும். மேலும் எனக்கு வழி தெரியாதே.

நம். வள்ளி! உன்னைத் துணையின்றித் தனிமையாய் அனுப்புவேனு? உன் அண்ணன்மார்களைக் கூடவே அனுப்பி தினைப்புனத்தில் வேண்டுஞ் சௌகரியங்களைச் செய்து வரும்படி சொல்லி யனுப்புகிறேன்.

வள். தங்களிஷ்டப்படியே செய்யுங்கள்.

நம். குமாரர்களே! உங்களிஷ்டம் யாது?

புத். தங்களிஷ்டமே!

நம். நான் மேற்சொல்லிய பிரகாரம் வள்ளியை தினைப்புனத்திற்கு அழைத்துக்கொண்டு போய் வேண்டுஞ் சௌகரியங்களைச் செய்துவிட்டு வாருங்கள்.

புத். உத்திரவின்படியே செய்து வருகிறோம்.

நம். சென்று வாருங்கள்.

[வள்ளி தன் அண்ணன்மார்களுடன் தினைப்புனத்திற்குச் சென்றுவிட்டாள்.]

## 6-வது களம்.

## தினைப்புனம்.

புத். தங்கா! இந்தப் பரண்மீதேறி அமர்ந்துகொள். ஏதாவது பறவைகள் வந்தால் இந்தக் கவண் கல்லினல் எறிந்து விரட்டிவிடவேண்டும். நாங்கள் சென்றுவருகிறோம். நீ அழைக்கும் பொழுதெல்லாம் வந்து பார்த்துவிட்டுப் போகிறோம். நாங்கள் போகலாமா?

வள். அண்ணு! சென்று வாருங்கள்.

இராகம்—எதூலகாப்போதி—தாளம்—ஆதி.

கண்ணிகள்

வள். சுந்தர மான இந்தச் சோலை சிங்காரம்
சொல்ல முடியாதிதன் பெருமை விஸ் தாரம்
அந்தரத் தோர்கள் அதிசயித் திடவே
அரிவைமா ரேநம தகங்களித் திடவே (சுந்)

தினைப் பயிர்க ளிருக்குஞ் செழிப்பதைப் பாராய்
சேயிழை காள்நம் கண்முன்னே நேராய்
மனக்கவ லைகளெல்லாம் மாற்றலாம் சீராய்
மங்கைய ரேநல் லிங்கிதங் கூறாய் (சுந்)

பாவைய ரேஇந்தப் பரணலங் காரம்
பகர்ந்திடச் சேயனுக்கி துவெகு தூரம்
கனகத்தி னால்செய்த கால்களின் ஜோதி
கண்களுக் கென்னேரம் அணியதுக் யாதி (சுந்)

வ-ம். பாங்கிமார்களே! இந்தத் தினைப்புனமானது செழிப்பாக வளர்க்கப்பட்டிருப்பது மன்றி, இந்தப் பரணும் அதி விநோதமாக அமைத்திருக்கிறது. ஆகவே நம் வீட்டில் இருப்பதைப் பார்க்கிலும் இந்தத் தினைப்புனத்தி விருப் பது மிகுந்த சந்தோஷத்தைத் தருகிறது. உங்கள் மன மெப்படி யிருக்கிறது. சொல்லுங்கள்.

சகி. அம்மணி! தாங்கள் சொல்லியபடியே எங்களுக்கும் இந்த இடத்திலிருப்பது ஆனந்தமாகத்தானிருக்கிறது தாயே.

வள். தாதிகளே பறவைகளெல்லாம் கூட்டமாகக் கூடி தினைக் கதிரைக் கொய்வதற்காக வருகிற சப்தங் கேட்கிறதாகை யால், அவைகளைக் கதிர்களில் நெருங்கவொட்டாமல் ஒட்டி விடவேண்டும் வாருங்கள்.

இராகம்-எதுலகாம்போதி-தாளம்-ரூபகம்.

வள். ஆலோலம் ஆலோலம் ஆலோலம் ஆலோலம்
ஆலோலம் ஆலோலம் ஆலோலம் ஆலோலம்
சோ!

சிச்சிலிகாள் காக்கைகளா
செம்பருந்து கூட்டங்களா
பச்சைநிற மயிலினங்காள்
பண்ணிசைக்கும் குயிலினங்காள்
சோ சோ
மரங்கொத்திக் குருவிகளா
மாடப் புறாவினங்காள்
தரந்தரப் பக்ஷிகளா
சம்பங்கிக் கோழிகளா
சோ சோ சோ

கூடுகட்டும் தூக்கணங்காள்
கொற்றராஜாளிப் பக்ஷிகளா
பாடும்வானம் பாடிகளா
பைரிநாண்வெண் கொக்கினங்காள்
கொண்டலாத்திக் குருவிகளா
கூடிவரும் பறவைகளா
நண்டுதேடும் உள்ளான்களா
நாகணவாய்ப் புள்ளினங்காள்
சோ. சோ. சோ.

வ-ம். சேடிகளே! தினைக்கதிர்களைக் கொய்யவந்த பக்ஷிகளையெல்லாம் கவண் கல்லாலெறிந்து விரட்டிவிட்டேன். இன்னும் வரும்பக்ஷத்தில் என்னிடம் வந்து தெரிவியுங்கள்.

---

(நாரத முனிவர் வருகிறார்)
இராகம்-தன்யாசி தாளம்-ஆதி.
பல்லவி.

நா. திருப்பணி ஆறுமுகம் உருப்பதிய நினைத்தால்
கருப்பிணி வோட்ட மெடுக்கும் (திரு)

அநுபல்லவி

விருப்பமுட னடியார் வேண்டியபொழுதினில்
வெல்லம்போல் துதிசொல்லுப் செல்வேலி நகரினில் (திரு)

ஏறு மயிலேறி யென் றியம்பும் பாட்டருணகிரி
ஏனுரைத்தா னென் றும் லோசித்து
ஈசனுக்குப் பிள்ளை குருவானநிலையைத் தெரிந்தும்
ஏகாந்த இன்பத்தை ரமித்து
நீறு காஷாயம் ருத்ராக்கம்
நேர்ந்த சின்னங்களின் சத்து
நிச்சயத்தைக் கண்டுணர்ந்து
நெஞ்சையோர் நிலையில் வைத்து (திரு)

வ-ம்— சுவர்க்க சாம்ராஜ்ய இந்திராதிதேவரும், என்னை எதிர் காணில் இருந்த நிலை கலங்கி எழுந்திருந்து வணங்குவார். ஏன்? தமக்கு எப்பொழுதும் என்னால் உத்தரபாகத்தில் நன்மையுண்டாவதாக விருந்தாலும், பூர்வத்தில் அகோர யுத்தமோ, அல்லது வேறுஎவ்வித கலகமோ பார்க்கும்படி யாக நேரிடுமே என்ற ஏக்கமேயல்லாது வேறில்லை. எனது பிதாவாகிய பிரமதேன் என்னை சிருஷ்டித்து இவ்வுலகில் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் நடத்தும் பொருட்டு அதற்கு காரண கர்த்தாவாக என்னை நியமிக்கப்பட்டிருக் கிறார். இல்லாது போனால் நாரதா கலகப்பிரியா என்ற வாக் கியம் எங்கும் நிலைபெறுமா? நிற்க, நானின்று இத்தினைப் புனம் பக்கமாக வந்துகொண்டி ருக்கும்பொழுது, 'சோ' வென்னும் மிருதுவாகிய குரல் எனது யாழியின் நரம்பின் இனிமையைப் பின்படுத்தி இரு செவி வழியாகப் புகுந்து என்னைப் பரவசப் படுத்தி இங்கிழுத்துக் கொண்டு வந்து விட்டது. நல்லது இந்தத் தினைச்சோலையைக் கவனிக் கிறேன்.

(நாலுபக்கமும் சுற்றிப் பார்த்து)

ஆ! ஹா! இதுவென்ன ஜோதிமயமாய் தோன்றுகிறது! ஆச்சரிய மாகவன்றோ இருக்கிறது.

இராகப்-தன்யாசி-தாளம்-ஆதி.

பல்லவி.

சுந்தரம் நிறைந்ததும்பும் புன்சிறந்த மங்கையிவள்
எந்தஉல கிங்குயேன் வந்தாள் (சுந்)

அனுபல்லவி.

அந்தர மிருந்துதேவர் துந்துபி முழங்கவந்த
இந்திரன் வணங்குப்எங்கள் கந்தசாமிக் குத்தகுந்த (சுந்)

சரணம்.

வானமதி யான தவ மானமுற் றிவள்முகத்துக்
கூனமா யொளிந்து கொண்டதோ—கண்டம்

வந்து சங்கம் நின்றுளம் தளர்ந்து வளர்ந்துஒதுங்கி
வாரிது நீரில் மறைந்ததோ
நானுரைத்தாற் வருந்தாக்ஷி
நாவடக்கா மலென்மாக்ஷி
தீனநின்கண் ணுக்குக் காக்ஷி
திவ்ய கிருப கடாக்ஷி (சுந்)

சோமனை யொத்தமுகத்தி லிருக்குங்கண் கிளைக்கண்டு
மான்க ளினமென்று நாடுதே—இவள்
சோவெனப்பறவையோட்டும் சொல்லினைக் கிள்ளைகள்கேட்டு
சொந்தமென வந்து கூடுதே
கானகத்தி லிவள் தினைக் காவல்புரிவ தெவ்விதம்
ஆன போதிலு மிங்கிது அற்புதமிகு அற்புதம் (சுந்)

---

வ-ம்—நல்லது! அருகிற்சென்று இவள் யாரென்றறிந்து நமது கலகத்திற்கு ஆஸ்பதம் தேடிக்கொள்ளுவோம்.

(வள்ளியிடம் போகிறார்)

(வள்ளி நாரதமுனிவரைக்கண்டு)

திண்டுக்கல் ஜானகி என்ற மெட்டு

வள்— புண்ணியமே உருவாகிய முனியே
புனத்தில் எழுந் தருளும்
பூரண ஆகம விதியாவு மறியும் ஞான
போதா எழுந் தருளும்
அண்ண லரனடியை யநுதினம் மறவாத
அன்பே எழுந் தருளும்
ஆசை விருப்பு நீக்கி அருந்தவமேபுரியும்
அய்யா எழுந் தருளும்

வம்— சுவாமி! அடியாள் நமஸ்கரிக்கிறேன். தாங்கள் இங்கெழுந் தருள இத்தலமும் யானும் என் முன்னோர்களும் என்ன புண்யஞ் செய்தோமோ தெரிகிலேன்.

நா. பெண்கள் நாயகமே! உன்னுடைய வரலாற்றைக் கேட்க மிக ஆவலுண்டாகிறது. சொல்லுவாயா?

வள்.— சுவாமி! தாங்களேது கேட்டாலும் சொல்லத் தயாராயிருக்கிறேன்.

(தர்க்கம்)

இராகம்-பிலஹரி-ஏகதாளம்.

நா. எக்குலத்தி லேயுதித்தாய்
இத்தருணத்தில் புகலாய் அம்மா

வள். மிக்க வலி பெற்றிடும்
குறக் குலத் திலே யுதித் தேன் முனியே

நா. அன் புடனே உன்னை யீன்ற
தாய் தந்தை யர் பேரதென்ன அம்மா

வள். அய்யன் நம்பி ராஜன் என்
அன்னை பேர் மோகினி யென் பார் முனியே

நா. அன்புட னுன்னை யூரார்
அழைக்கும் நாம மென்ன அம்மா

வள். வள்ளியென இவ் வனத்தில்
வாழுவோ ரெல்லா மழைப்பார் முனியே

நா. கிள்ளை மொழி வள்ளி நீ
கேவல மாய்க் காவல் செய்வ தேனோ அம்மா

வள். தள்ள லாமோ எங்கள் குற
ஜாதி வழக்கத் தொழிலை முனியே

வ-ம் சுவாமி! எங்கள் ஜாதியில் பெண்களை தினைப்புனத்திற்கு காவல் வைப்பது வழக்கம். அதுபோல் என்னையும் எனது தாய் தந்தையர்கள் நியமித்திருக்கிறார்கள்.

நா. ஓகோ! மெத்த சந்தோஷம்! அம்மா வள்ளி, இன்னும் உனக்கு விவாகமாகவில்லைபோலிருக்கிறதே!

வள். ஆம் சுவாமி! என் தாய் தந்தையர்கள் அது விஷயமாக இதுவரையும் கவனிக்கவில்லை. இனிமேற்கொண்டு கவனிப்பார்கள்.

---

## தர்க்கம்

இராகம்-பிலஹரி-அடதாளம்.

நா. பருவ காலத்தை வீணாய்
பாழாக்கி விட லாமோ தாயே

வள். மருவிய விதி தன்னை
மாற்ற எவரா லாகும் முனியே

நா. விதி விதி யென்ப தெல்லாம்
வீண் வார்த்தை யல்ல வோ தாயே

வள். விதியென்ப தொன்றில்லா விட்டால்
தெய்வமும் தானேது — முனியே

நா. பாலுண்டு பசியாற
காலம் ஒன்று வேண்டுமோ — தாயே

வள். பாலோ டாயினும் கால
மறிந் துண்ண வேண்டுமே — முனியே

நா. காலிருந்தும் நடக்கக்
கருதாம லிருப் பாரோ — தாயே

வள். காலம் தனக் கிசைந்த
கோல மல்லவோ வேணும் — முனியே

நா. கழுகு மலை முருகன்
கௌரவம் தெரியுமா — தாயே

வள். செழுங் கதிர் வேல வனைத்
தெரிந்து செய்வ தென்ன — முனியே

நா. விண்ணாடர் குறை தீர்த்த
வேலாயுத னல்லவோ — தாயே

வள். பெண்ணாள் என்னிடத் தவன்
பெருமை யேன் பேசுகிறீர் — முனியே

---

## விருத்தம்.

நா. இந்தவெங் கானில் வந்து இப்படித் தனியா ளாகி
செந்தினைப் புனங்காத் திந்த சிறுகுடி வாழ்தல் நன்றோ
கந்தன்சொற் படிகேட் டெங்கள் கழுகுமா மலைக்குவந்தா
சுந்தர மானே நித்ய சுகத்தினி லிருக்க லாமே [தால்

வ-ம். அம்மா! கழுகாசலத்தில் வாழும்படிமான ஆறுமுகக் கடவுளை திருமணஞ் செய்து கொண்டால் உங்கள் குலக்குற்றம் நீங்கப் பெற்று உலகிலுள்ளார் புகழ்ந்து பூஜிக்கும்

படியான தேவ அம்ஸத்தை அடைவாய். ஆகையால் உன் மனத்துள் அன்னவரை நாயகனாக அடைய உறுதியாக எண்ணுவாய் தாயே.

விருத்தம்.

வள். புலியது பசுவின் தோலைபோர்த்திமுன் திரிவதைப்போ
வலிபெறு தவவேடத்தை வஞ்சனை யாகக்கொண்டு [ல்
கலியவும் இதங்கள் பேசி நயமொழி யுரைத்து நின்றீர்
பலிபெரும் பிச்சையாண்டிப் பாலனை மணஞ்செய்வேனே.

வ-ப். சுவாமி! தங்களுக்கு இந்தக் காரியமெல்லா மெதற்கு? இல்லறத்தி லுள்ளவர்கள் முயற்சிக்கவேண்டிய காரியத்திற்கு துறவியாகிய தாம், ஏன் இவ்வளவு சிரம மெடுத்துக்கொள்ள வேண்டும்? அன்றியும் பிச்சைக்காரன் பிள்ளையாகிய முருகனைக் கல்யாணஞ் செய்துகொள்ள என்மன மிசையாது.

நா. அம்மா! எங்கள் ஆறுமுகக் கடவுளின் பெருமையை யறியாத உனக்கு அறிவிக்க வேண்டுமென்றே சொல்லத் துணிகிறேன், கவனித்துக் கேள்.

முருகன் திருமால் மருகன்—என்ற வர்ணமெட்டு.

பல்லவி.

சிவசண் முக குருபரன் பெருமை அந்த
தேவாதி தேவர்கள் மூவர்க்கு மில்லை (சிவ)

அநுபல்லவி.

தவயோகியர் சார்ந்து தினம் பணி
தணிகாசல நகராகிய ஸ்தலமேவிய பதியாகிய (சிவ)

சரணம்.

சிரசிலே—குட்டி பிரமனை முன்சிறை யிட்டவன்
கோகனக பாதன்
ஒரு— குற்ற மில்லாத சிவனுக் குபதேசம்
செய்த குருநாதன்

எட்டுத் திசையும் புகழ்ந்திடு நன்னீதன்
ஏந்திழை யாவர்க ளும்மகிழ் விநோதன்
மட்டிலடாணு ராகப்ரிய சங்கீதன்
மதுரத் தமிழ் முனிவர்க் கருள்
ஒரு சுப்பிர மணியப்பெயர் (சிவ)

வ-ம் தாயே! இவ்வளவு பெருமைக்கிடமாகிய பகவானை நீ மணஞ்செய்து கொள்ளுவதினுல் வரும் கெடுதி யாதோ நான் அறிந்திலேன் அம்மா! இனியாவது உண்மை தெளிந்து உத்தமமான மொழியை என் காது குளிர நிரப்பு கேட்கலாம்.

வள். சுவாமி! முருகனுடைய பெருமைகளை நன்று யெடுத்துச் சொன்னீர்கள். அதுபோல் எங்களுடைய பெருமையும் எடுத்துச் சொல்லுகிறேன் கவனித்துக் கேளுங்கள்.

பாளைவாய்க் கமுகில் வந்து—என்ற வர்ணமெட்டு.

கண்ணிகள்.

மேருவெற்பை யோரசைப்பி னுலசைத்துப் பம்பரம்போல்
மேதினியி லாட்டிநிலை நாட்டுவோம்
எங்கள்—ஜாதிக்குள்ள வித்தையெல்லாங் காட்டுவோம்
அட்டமாசித் திகளெல்லாம் இஷ்டம்போல் செய்துமுடிப்
[போம்
துஷ்டயெம னையும்கையா லாட்டுவோம்
பிரம்ம—சிருஷ்டிக்குமுன் னுள்ளதையும் காட்டுவோம்

வ-ம் முனிநாதரே! மேரு என்று சொல்லக்கூடிய பர்வதத்தைப் பம்பரம்போல் சுற்றும்படி செய்வோம். இன்னும் பிரம்ம சிருஷ்டிக்கு முன் இன்னது இருந்ததென்று எங்கள் ஜாதியிற் பிறந்த சின்னக்குட்டிகளும் உள்ளங்கையில் காட்டுவார்கள். மேலும்,

### விருத்தம்

அத்தமதில் தலையோடு கொண்டிரந் துண்ணுகின்ற
ஆண்டியான
பித்தன்மகன் பித்தனுக்கு எனைக்கூட்டிக்கொடுத்திடவும்
பிரியங்கொண்டு
உத்தமர்போல் நடித்திந்த தினைப்புனம்வந் தேதேதோ
உளறுகின்றீர்
இத்தொழிலை எத்தனைநாளாய்க் கைக்கொண்டீ ருமதுகுலத்
தியற்கைதானோ.

வ-ம் நாரத முனிவரே! தாங்கள் எவ்வளவுதான் எடுத்துரைத்தாலும் கேவலம் ஆண்டியின் மகனைக் கல்யாணம் செய்து கொள்ளநான் இசையமாட்டேன். அதுவுமன்றி எனது தாய் தந்தையர்கள் பார்த்துச் செய்து வைக்கவேண்டிய காரியத்தை தாம்ஏதேதோ என் மனத்திற்குப் பிடிக்காத வார்த்தைகளைச் சொல்லி என்னைத் தொந்தரவு செய்கிறீர்கள். இனி எனக்குக் கோபமுண்டாகும், பேசாது போய் வாருங்கள்.

### வெண்பா

நா. காட்டில்வாழ் வேட்டுவர்தம் கன்னிகையே பல்வளஞ்சேர்
நாட்டிற் பிறந்தாயேல் நாகரீகம்—வேட்டுவருக்
கென்னசுகம் என்னபலம்
என்னநலம் என்னபுகழ் இங்கு

வ-ம் அம்மா! வேடர்களுடைய செயலைக் கேட்டுமிருக்கிறேன். நேரில் கண்டுமிருக்கிறேன். காட்டில் வாழுவோர் வேட்டையை விரும்புவோர்தானே நன்றாய்த்தெரியும். ஆயிரம் காகங்கள் ஒன்று கூடினாலும் ஒரு கல்லைக்கண்டால், ஒரு காகம் போனயிடம் மறுகாகத்திற்குத் தெரியாமலெப்படியோடுமோ அப்படிப்போல் அநேகம் வேடர்கள் வில், அம்பு, கத்தி, கட்டாரி, முதலான ஆயுதங்களோடு புறப்பட்டு வந்தாலும் எங்கள் வேலாயுதப் பெருமானை நேரில்

கண்டமாத்திரத்தில் குதிங்கால் பிட்டத்திற்பட வோடி வொளிக்க யிடங்தேடவே முயலஹேதுவாகும். ஆதலால் வேடர்களுக்கு என்ன பலம்? என்ன வீரம்? என்ன தொழில்? என்ன குடியிருப்பு? ஆகவே என் வார்த்தையைக் கேட்டு கழுகுமலையில் வீற்றிருக்கும் எம்பெருமான் ஆறுமுகக்கடவுளை நீ திருமணஞ் செய்துகொண்டால் என்னுளும் சுகித்திருக்கலாம். கரும்புதின்னக் கைக்கூலியுந் தருகிறே னென்றால் வேண்டாமென்று சொல்லுவார் உன்னையன்றி வொருவரையும் நான் காணேன் அம்மா!



தர்க்கம்

இராகம்-சுருட்டி தாளம்-ஆதி.

பல்லவி

நா. சொல்லுமென் வார்த்தை கேளம்மா - தள்ளாதேசும்மா

அநுபல்லவி

அல்லும் பகலுமிந்த அவஸ்தையை விடுத்து
அவனியர் தொழவிருப் பாய்செவி கொடுத்து (சொ)

பல்லவி

வள். கைவரிசை செல்லாதுபோம் கற்றுவந்தாலும் (கை)

அநுபல்லவி

பொய்யான தவவேடம் புனைந்துவந் தவரே
பூமியிற் கோள்சொற்கள் புகலும்நா ரதரே (கை)

சரணம்

நா. உனக்காகவே நான் சொன்னேன் ஒகோ இந்தச்சினமேன்
மனக்கவலை கொள்ளாதே மானிலத் தியல்புதான் (சொ)

வள். எனக்குப் பரிந்துகொண்டு இசைக்கவந் ததுபோதும்
இனிப்புனத் தில்நிற்காமலெங்கேனும் போயோதும் (கை)

நா. வேறொருவருமில்லை மேதினி யிலும்சொந்தம்
ஆறுமுகனைச் சேர்ந்தா லடைவாயே பிரமானந்தம் (சொ)

வள். கூட்டிக் கொடுப்பதுங்கள் கோத்திரத்தின் முறையோ
ஓட்டமாய்சொல்லவந்தீர் உமக்கென்ன அக்கரையோ (கை)

நா. கூட்டிக் கொடுப்பதெங்கள் கோத்திரத்திலுமில்லை
மேட்டிமீமாட்டியுன்னைக் காட்டி மணமுடிப்பேன் (சொ)

வ.ம். தாயே! அணுவளவேனும் நாகரீகமென்பதை ஞாபகத்திலுங் கொள்ளாத வேடருக்கு மகளாக யிருப்பதினுலே ஜாதிக்குத் தகுந்த புத்தியென்னும் பழமொழிக்கு மாறுதவில்லாதவிதமாய் மொழிகிருய்போலிருக்கிறது. ஆனுலும் பரவாயில்லை. இனியேனும் இக்குலாபேக்ஷையை விட்டு, என் மொழிப்படி முருகக்கடவுளை உன்மனத்தில் நாயகனுக அடைய எண்ணுவாய் அம்மணி!

---

இராகம்-பரசு—தாளம்-ஆதி.

பல்லவி.

வ.ள். திருட்டு நாரத முனியே
தினைப்புனக் குறத்தியென்னிடத்தினிற் பிதற்றுறீர் (திரு)

அநுபல்லவி.

உருட்டும் புரட்டுங் கொண்டு மிறட்டுறீரடிக்கடி
குறட்டுக் கம்பாலெறியும் முரட்டுஜாதியார் நாங்கள்
கொஞ்சு வேனு கந்தனைக் கொஞ்சுவேனு
சும்மா- பஞ்சப் பாட்டைப் பாடுகிறீர் (திரு)

வ.ம். நாரத முனிவரே! வீணுக எனக்குக் கோபத்தை மூட்டாதீர்கள். இதுவரை பெரியோர்களை நிந்தித்துப் பேசுவது கூடாது எனப் பொறுத்திருந்தேன். இனிமேலும் தங்கள் வார்த்தையைக் கேட்டு மனஞ்சகிக்கமாட்டேன். மரியாதையாகப் போங்கள். சகி வாடி நாம் போவோம்.

---

இராகம்-பரிசு—தாளம்-ஆதி.

பல்லவி.

நா. அறிவில்லா சிறு குறத்தி நான்
அடிக்கடி யுரைப்பதை தடுத்தவமதிக்குருய் (அறி)

அநுபல்லவி.

நெறியுடனேநான் சொல்லும் நீதிதனைஎண்ணுமல்
எறிவேல்புன் றுழைந்தாப்போ விசைத்தாய்காதுகொள்
ளாமல்

இது தருமா ஞாய வழி யாகுமா-கேட்க
எனுனக்கு ஞான மில்லை (அறி)

வ-ப். நான் உனக்கு உபகாரத்தின் பொருட்டு வேண்டிய நீதிகளை எடுத்துச் சொல்லியும் அவைகளையெல்லாம் நன்மையென யெண்ணுமல் புண்ணில் வேலெறிவது போலக் கொடுமையான மொழிகளைச் சொல்லுகிருய். இது சரியல்ல. என் வார்த்தையைக் கேள். நான் இங்குவந்து உன்னைப் பார்த்தபொழுதே உனக்குத் தகுந்த மணவாளன் அந்தக் கழுகுமாமலை வேலனெனத் தீர்மானஞ் செய்துவிட்டேன். ஆகையால் எவ்விதத்திலும் அன்னவருக்கே உன்னை மாலை சூட்டி என் கண்களால் தரிசிப்பேன். இது சத்தியம்! சத்தியம்! சத்தியம்! போய்வருகிறேன்.

---

## 7-வது களம்.

### திருக்கழுகாசலம்.

அயில்வேலன் மயின்மீதமர்ந்திருக்கிருர்.

நாரதர் வருகிருர்.

விருத்தம்.

சுப். அன்னையே யென்ற னப்பனே திருச்சிற் றம்பலத்
தமுதனே யெனநான்
உன்னையே கருதி யுன்மணி புரிந்திங் குலகிலே கருணை
யென்பதுதான்
என்னையே நிலையா யிருந்துளம் வருந்தி யிருக்கின்றே
னென்றுள மெலியும்
மன்னுமென் வுடம்பின் மெலிவுநா னிருக்கும் வண்ண
மும் திருவுள மறியும்.

"திருவருட்பா"

---

மயிலேறியே வருவாய்—என்ற மெட்டு.

இராகம்-தோடி—தாளம்-ரூபகம்.

பல்லவி.

நா. மெய்-ஞான தேசிகா
நலமாகவே அயில்வேலையும்
பலமாகவே வேரூன்றிய (ஞா)

அநுபல்லவி.

காலைவேளை யெழுந்துஓடி
கானில்வந்து நின்றேன்பாடி
சோலைநிறை யோரம்ஓடி
கண்டேன்கனி யொன்றைநாடி
கலகலவென ஒலிஇசையுடன்
பலமுடனதை பருகுவாய்ரசம் (ஞா)

நா. அறுமுகனே! அடிபணிந்தேன்.

சுப். நாரதமுனிவரே! மெத்த சந்தோஷம்.

பாட்டு.

திண்டுக்கல் ஜானகி—என்ற வர்ணமெட்டு.

எங்கெங்குசென்றீர் ஏதேது கண்டீர் எந்தனுக்கெடுத்துரைப்பீர்
அங்கங்கு நடந்த அதிசயம்யாவையும் அன்பாயெடுத்துரைப்பீர்
தவநாரத முனியே (எங்)

வ-ம். நாரதமுனிவரே! தாம் இப்பொழுது எங்கிருந்து வருகின்றீர். ஏதோ முகமானது மலர்ச்சியுடையதாய்க் காணப்படுகிறதே! என்ன விசேடம்?

நா. எம்பெருமானே! நான் திரிலோகமுஞ் சென்று மும்மூர்த்திகளைத் தம்பதி சமேதராகக் கண்டானந்தங்கொண்டு இப் பூலோகத்திற் சிற்றூர் என்னும் வனமார்க்கமாக வந்துகொண்டிருக்கும்பொழுது கதிர்முதிருந் தருணத்திலிருக்கும் தினைச்சோலை மத்தியில் ஒரு கனியைக் கண்டு வந்தேன். அக்கனியானது:

### வெண்பா.

மாங்கனிக்கும் தேன்கதலி வண்கனிக்கும் மேலினிக்கும்
பூங்கனியைக் கண்டுமணம் பூரித்தேன்—நான்கனிந்தேன்
ஐயா முருகையா அக்கனியை இக்கணமே
கொய்யாமற் கொய்தணைத்துக் கொள்.

---

சுப். நாரதமுனிவரே! தாம் கனியென்று சொல்லியதைக்கேட்க என்மனதிற்கு அதிக ஆவலை யுண்டுபண்ணுகிறது. ஆகையால் நீர்:

### தர்க்கம்.

இராகம்-அடாணு—தாளம்-ரூபகம்.

சுப். மார்க்கத்திற் கண்ட கனிதனக் குற்ற
சிலாக்கிய மென்ன முனியே

நா. அதை-நோக்கும் பொழுதே புலன்களுக் கெல்லாம்
சுவைதருந் தீங் கனியே

சுப். பக்ஷிகள் கண்டால் இந்நேர மதைப்பற்றி
பக்ஷித்தி டாதோ சொல்வீர்

நா. பக்ஷிகள் கண்டால் பறந்தோடும் ஆகையால்
பக்ஷமுடன் சொல்லுவீர்

சுப். எட்டாத கொம்பி லிருக்குமக் கனியை
எப்படிக் கொய்திட லாம்

நா. எட்டும்படிக்கிரு கொம்புண் டதைப்பற்றி
ஏறிப் பறித்திட லாம்

சுப். மிக்க மேன்மையுள்ள அக்கனிக் கெவ்விதம்
மேவுங் குறிக ளுண்டு

நா. குளிர்ந்த முகமுண்டு கொங்கை யிரண்டுண்டு
கோதில்லாக் கண்க ளுண்டு

சுப். பெண்களுக் குள்ள குறிக ளிருப்பதால்
பேசுமோ வாய் திறந்து

நா. ராகப்-பண்களுக் கெல்லாம் சுவைதருமே அந்தப்
பைங்கிளி வாய் திறந்தால்

---

தர்க்கம்.

இராகம்-பியாக்—தாளம்-ஆதி.

சுப். நீர்சொன்ன வார்த்தையால் நேரிழை யாமென
நிச்சய மாகவே நான் தெரிந்தேன்
சீர்பெரு மாதவ ரேஅந்த மாதெவள்
செப்புவீ ரறிந்திட வே நினைந்தேன்

நா. வனத்தொரு புறத்தினில் தினைப்புன மொன்றுண்டு
மங்கை யவளோகா னங்கு கண்டேன்
கனத்துப் புடைத்ததனக் குறக்குலப் பெண்ணவள்
கவண்கண்டு மிக அதி சயங் கொண்டேன்

சுப். பேரழ குடையவ ளெனப்புகழ்ந் தீரவள்
பேரென்ன இப்பொழு தே புகல்வீர்
தாரணி மீதினில் யார்செய்த மாதவத்
தால்வந் தவளதை யும் புகல்வீர்

நா. வள்ளிக் கிழங்கு பறித்த குழிதன்னில்
வந்தவள் வள்ளியெ னும்பெய ராள்
நீர்-கொள்ளத் தகுந்த நல் லியலுடையாள் இந்தக்
குவலயத் திற்றனக் கிணை கிடையாள்

வ-ம். சுவாமி! அவளுடைய அழகை எடுத்துச் சொல்ல என்றால் முடியாது. தாங்கள் தாமதிக்காமல் வேள்வி மலைச் சாரலி லிருக்கும் தினைப்புனத்திற்குப் போய் எப்படியாவது தந்திரஞ் செய்து அந்தக் குறமாதைக் கைப்பற்றி வந்தால் தான் வீரமும், புகழும், மேன்மையும், கீர்த்திப்பிரதாபமும் பெற்றவராவீர்கள். அவளை சாமான்யமாக எண்ணி விடக் கூடாது. எளிதில் தங்கள் கையில் அகப்படமாட்டாள். தங்களுக்காக நான் வேண்டிய கோகர்ணம், கெஜகர்ணம் வைத்துப் பார்த்துவிட்டேன். எனது இந்திரஜால

மெல்லாம் எள்ளளவும்பயன்படாது போய்விட்டது. இது விஷயத்தில்தான்தெரியவேணும் தாங்கள் சாமார்த்தியங்கள்.

சுப். நாரதமுனிவரே! இதோ புறப்பட்டுப் போகின்றேன். நீர் சென்றுவாரும்.

## தினைப்பனம்.

## 8-வது களம்.

### சுப்பிரமணியர் வேட ரூபத்தோடு வருதல்.

இராகம்-வசந்தா—தாளம்-ஆதி.

பல்லவி

சுப். தினைப்புன மென்பது இதுதானோ—தவ
சீல மிகு நாரதர் சொன்ன (தினை)

அநுபல்லவி.

வனப்பையுற் றடைந்தவர் கண்களைக் கவரும்
வானுற வோங்கி வளம்பெற வளரும்நல் (தினை)

சரணம்.

பற்பல ஜாதிப் பறவைகள் யாவும்
பண்புடன் வாழ்ந்திட வந்திங்குமேவும்
அற்புத னுமந்த அமரர்கள்கோவும்
ஆயிரங் கண்களாலுங் கண்டவாவும் நல் (தினை)

வ-ம். எந்தச்சமயம் நாரதர் வந்து தினைப்புனங் காவல் புரியும் வள்ளிப் பெண்மயிலின் ரூபத்தின் பெருமையைப் புகழ்ந்து பேசினாரோ, அதுமுதல் என்மனங் கலங்கி நிலைதவறி, செயல் மறந்து, இந்த இடந்தேடி நான் வருவதற்கு முன்னாலேயே என் கட்டிற்கடங்காத மனமானது வலிய இங்கோடி வந்து விட்டது. சத்தமொன்றுங் கேட்கவில்லையே! நல்லது கவனிப்போம். (சுற்றிப்பார்த்து)

விருத்தம்.

சுப். காலோ கடுக்கப் பரணேறி நின்று
கவண்வீசிக் காவல் புரிய
ஆலோல மென் றேலமிட்டே யடிக்கடி
யறைகின்ற மங்கை யிவள்போல்
பூலோகத் தெங்குங் கிடையாது மெய் இவள்
போக சுகத்தின் இன்பம்
சாலோ கத்தின் பத்தின் மேலாகு மென்பதிற்
சற்றுந் தடை யில்லையே

வ-ம். நாரதமுனிவர் கூறிய வள்ளியென்னும் பெண்மயிலாள் இவளே! சந்தேகமில்லை. மலைநாட்டிற் பிறந்தவளாகையால் இவள் முன்னே மற்றக் கோலம் பூண்டு போவதினும் வேடனாக உருமாறிப் போவது நலமென்றெண்ணி இந்த ரூபத்துடன் வந்திருக்கிறேன். நல்லது ஒரு காரணம் வைத்துக்கொண்டு செல்கிறேன். யார் நம்மைத் தெரிந்தழைக்கப்போகிறார்கள்?

---

## 9-வது களம்.

(பாட்டு தர்க்கம்.)

இராகம்-கமாசு—சாப்பு தாளம்.

கண்ணிகள்

சுப். வலை தப்பி யேகுற மான்களே—இங்கு
மான்வரக் காணீரோ நீங்களே
சிலை தப்பி எந்தனின் கைக் கணை தப்பியே
சித்த மயக்கங் கொள்ள தத்தித் தத்தி என்றன் (வலை)

### பாட்டு.

சகி. ஆர்காணும் நீர் சிலே வேடரே—மானே
யாள் புனத்தில் வந்து தேடுறீர்
நீர்கண்ட மானுக்கு காலுண்டோ கையுண்டோ
நேருக்கு நேராக நீரும் மொழிவதுண்டோ (ஆர்)

சுப். வள்ளி மானே இவ் வழி யாகவே—ஒரு
புள்ளி மான் வரக் கண்டதுண்டோ
உள்ளபடி எந்த னுள்ளங் கவர்ந்ததால்
மெள்ளப் பிடித்துக்கைக் கொள்ள யிங்கு வந்தேன் (வள்)

சகி. அத்தை மகன்போல்வாய் போக்குறீர்—சும்மா
ஆள் நோட்டம் பாராமல் ஏய்க்குறீர்
எத்துக் கள்ளாகாமப் பித்துக்கள்ளா சுத்த
வித்தைக் கள்ளா மெத்தக் கற்ற கள்ளா போம் போம் (ஆர்)

---

சுப். பெண்காள்! பயப்படாதீர்கள். என் கை அம்பின் குறிப்பைத் தவறி ஒரு மான் இந்தப்புனத்தில் வந்து புகுந்தது. அதைத் தேடிவந்தேன். நீங்கள் கண்டிருந்தால் சொல்லுங்கள்.

வள். ஐயா வேடரே! நான் சொல்லுவதைக் கவனியுங்கள்.

### விருத்தம்.

ஒருமானைத் தேடிப் படர் கானகத்தில் உலகளந்த
பெருமானடைந்த வினையறியாமற் பெடைமடமான்.
தருமானிரண்டு விழிமானுலாவுமித் தினைப்புனத்தில்
வெருமானைத் தேடியலேவதென்னே மதிமன்னவனே.

வ-ம். வேடரே! மானைத்தேடிக்கொண்டு வனமெல்லாம் திரிந்தொருவர் அவஸ்தைப் பட்டாரென்பதைக் கேள்விப்பட்டிருக்கவில்லையா! ஆயினும் பரவாயில்லே. நீர்தேடி வந்த மானுக்கு ஏதாவது அடையாளமுண்டோ! சொல்லும்?

சுப். பெண்கள் நாயகமே! நான் தேடிவந்த மானின் அடையாளங்களைத் தெரிவிக்கிறேன் கவனித்துக்கேள்.

### விருத்தம்.

காயாத கானகத்தே நின்றுலாவும் நற்காரிகையேபுல்
மேயாதமான் புள்ளிமேவாதமான் நல்லஜாதிமான்
சாயாத கொம்பிரண் டிருந்தாலுமது தலை நிமிர்ந்து
பாயாதமான் அம்மானைத் தேடிவந்தேன் ஆரணங்கே

வ-ம். பெண்ணே! தெரிந்து கொண்டனையா? இன்னும் வேண்டியதைக்கேள் தெரிவிக்கிறேன்.

### விருத்தம்.

வள். எந்தமானிடவேடர் நீர்காண் வேட்டைக்
கேற்றமான் மலையிலுண்டு இம்மான் நம்பி
தந்தமான் உமது வலைக்கு அகப்படாமான்
சவுரியமான் தைரியமான் ஜாதிமான் நான்
அந்தமான் மகனனங்கன் தனக் காற்றமல் [போட்டு
ஆண்பிள்ளை ஒரு பெண்பிள்ளையிடம் வந்து அபயம்
சொந்த அம்மான் மகன்போ லேதேதோ சொல்லுகிறீரேன்
தோழியை விட்டினி அடித்துத் துரத்துவேனே

வ-ம். ஏவேடா! என்னை ஏமாற்றலாமென நினைத்து மானைத்தேடி வந்ததாக வழக்கு வைத்துக்கொண்டு வாயில் வந்ததையெல்லாம் பிதற்றுகிறாய். இம்மான் நம்பிராஜனுடையமான். தைரியமிஞ்சியமான். ஆகையால் இந்தத் தினைப்புனத்தை விட்டு சீக்கிரம் போய் விடு. இல்லாதுபோனால் என் தோழிகளை விட்டு நையப்புடைத்தனுப்புவேன் ஜாக்ரதை!

சுப். பெண்ணே! உன்னை என் கண்ணாற்பார்த்த பிறகு கவனிக்காமற்சென்றால் மன்மத துரோகியாவேன் ஆகையால்,

(பாட்டு தர்க்கம்.)

இராகம்-சங்கராபரணம்-ஏகதாளம்.

சுப். மானைப்பிடியே வனக்கிள்ளையே
மடமயிலே குயிலே

வள். மான்பிடிக் கிள்ளை வனக்குயி லிங்கே
வரக்காணேம் போங்காணும் வேடரே

சுப். தேனே செந்தேனில் தெளிரசமே யெங்கும்
தித்திக்கும் மாங்கனியே

வள். தேனுங் கனியும் தினைப்புனத் துண்டோ
திருட்டுத் தனமேன் வேடரே

சுப். செந்திருவே வால சுந்தரியே நல்ல
தேவ ரம்பை ஸ்திரீயே

வள். செந்திரு சுந்தரி ரம்பை நானல்ல
தினைப்புனங் காப்பவள் வேடரே

சுப். ஆணிப்பொன்னே முழு மாணிக்கமே விலை
யற்ற நவ ரத்னமே

வள். ஆணிப்பொன் மாணிக்க ரத்தின மானதோ
ராள்போ லிருக்குமோ வேடரே

வள். ஏ வேடா! நீ கெட்ட எண்ணத்துடன் இங்குவந்து ஏதோ தாருமாறான மொழிகளைச் சொல்லி நிற்கிறாய். இது உனக்குத் தகாது. உன் மானம் அழிந்துபோக நேரிடும். சீக்கிரம் இந்த யிடத்தைவிட்டு அகன்று போய்விடு.

---

விருத்தம்.

சுப். ஈடோட நின்றமணி மயமாக இழைத்த குழை
தோடோ டிலங்கிய சுந்தரியே தொலையாத யெந்தன்
பாடேதும் உந்தன் செவிக்கேற்க நான்படும் பாடறிந்தும்
ஓடோ டெனப் புகல்வ தேற்குமோ மட மானே.

பாட்டு.

இராகம்-பூரிகல்யாணி-ரூபகதாளம்.

பல்லவி.

சுப். சித்ர மா மயிலே எழில் கலப (சி)

மகுடங்கள்.

மிகு—திவ்ய கானரச மேவு பூங்குயிலே (சி)
சேர நாடி மோக மாகி னே னடி (சி)
தினமு மருவ உருகி வாடி னே னடி (சி)
சித்த மயக்க மிகுத் தது கலவி புரி யடி (சி).
சிவனொடு சமர் புரிந்த மதனன்
விடுகணைபட மெலிகுறேனடி (சி)

சரணம்.

நித்த முன்னை மற வேனுண்மை கேளடி
நேசஞ் செய்ய இது வேறல்ல நாளடி
உத்தமியோநா னுனக் கென்று மாளடி
உறுதி யாகச் சொன் னேன்
உணர்ச்சி கொண்டு நீ புணர்ச்சி செய்திட (சி)

வ-ம். பெண்ணே! நான் சொல்வதைச் சற்று கவனி. நாமிருவரும் அநுதினம் இரதியும் மதனும் போலவும், மலரும் மணமும் போலவும், மானுங் கலையும் போலவும், மாடப் புறுவைப் போலவும் கூடிக்குலாவி மதனாவேசங் கொண்டு மெய்புளகிக்க நித்திய போகத்தை யநுபவிக்கலாம். புறப்படு, தாமதிக்காதே!

விருத்தம்.

வள். படுக்காளி நீயாரோ பித்துக் கொள்ளி யென்று
பார்த்திருந்தேன்
கொடுக்காலே கொட்டாத தேள் தனைப் பூச்சியென்று
கொள்வார் போன்றாய்
துடுக்கான சேடிமார்கள் உன்னையினி விடமாட்டார்
சொன் னேன்
தடுக்காமல் என்மொழியை மறுஜென்ன மென்று எண்ணி
செல்வையே.

வம். ஏ வேடா! இதுவரை ஏதோ உளறுகிருய் என்று பொறுத்திருந்தேன். நீ அதை யோசிக்காமல் கோட்டினல் தேள் கொட்டாது போனல் பிள்ளைப்பூச்சி யென்று எண்ணுவது போல் எண்ணிவிட்டாய். என் சேடிகளும் சேவகனும் பொல்லாதவர்கள். அவர்களிடம் ஒரு வார்த்தை சொல் வேணுகில் உன்னைப் பஞ்சுப்பொதியில் நெருப்பு வைத்துக் கொளுத்துவதுபோல் செய்துவிடுவார்கள். உடனே இதை விட்டகன்று போய்விடு நிற்காதே!

பாட்டு தர்க்கம்.

மந்தகாசமுக என்ற மெட்டு.

---

சுப். பூரணச் சந்த்ரிகை போதி துல்லாசமாய்
புணர வருவாயடி மாதரசே

வள். சார மில்லாத வீண்மொழி யாடுதல்
சம்மத மில்லையென் றறிவாயடா

சுப். என் சம்மதமில்லை எனக்குரைப் பாயதை
இந்தப் பருவம் வீண் போகலாமா

வள். நான் சற்று முன்மனம் போலெண்ணி நிற்கிலேன்
நாட்ட மறிந்துநீ யழைக்கலாமா

சுப். நாட்ட மறியினும் வாட்டுருன் மாரனும்
நாயகி யாளே மருவ வாடி

வள். சேட்டை மொழிகளை செப்புவ தாலினி
சீச்சீ அற்பன் செயலிது வாகுமே.

---

விருத்தம்.

சுப். சோலைகற் கிளியே உந்தன் சொற்படி நடப்பேன் இட்ட
வேலை ஊழியங்கள் செய்வேன் வேறொரு விஷயம் சொல்லேன்
லீலைசெய் தணைந்துபோக நிலைதனில் நிற்பேன் என்னை
மாலையிட் டணைவாய் காலை மனதினல் பிடித்தேன் மானே.

பாட்டு.

வந்தவேளை யிதுநல்லவேளை —என்ற மெட்டு.

---

சுப். மாதே உன்னை யின்று கண்ட போதே மிக
மையல் மீறுதடி என்ன செய்வேன்
ஐயையோ நானெவ் விதத்தினி லுய்வேன்
உந்தன்—சையோகம் நேர்ந்தால் மனமகிழ்வேன்
பாவி அந்த சிலை மாரன் விடுங் கொடும்
பாணங்கள் தைத்தென்னை வாட்டுதடி—மனம்
நாணம் ஒளித்தாசை மூட்டு தடி—உன்னைக்
காணும் போதே குளி ராட்டு தடி
எந்திழை யேஉன்னைச் சேராம லேசெல்ல
எந்தன் மனம்சம்ம திக்கு தில்லை—அடி
உந்தனு விப்போது வந்த தொல்லை—இதிற்
சந்தேகம் வேண்டாம்நம் பெந்தன் சொல்லை— (மா)

---

வ-ம். பெண்ணே! உனக்குக் கருணையில்லாமற் போனால் உன் கையால் என்னைக் கொன்றுவிடு. அந்தப் பாவி உருவிலி கையிற் காட்டிக் கொடுக்காதே! அவனது பூங்கணைகள் என் மார்பில் தாக்கி உயிர்வைத்து சித்ரவதை செய்கிறது. கோடி வந்தனம் செய்கிறேன். புண்ணியமுண்டு. நானும் உனக்குத் துணையாக விருந்து பறவைகளை ஓட்டுகிறேன். மனமிரங்குவாயடி கண்ணே! ஒரு முத்தங்கொடு!

---

பாட்டு

கண்ணுயிரம்படைத்த—காவடிச்சிந்து.

வள். துஷ்டா நீ என்னசொல்ல லுற்ருய் ஞாயமுமல்ல
தொடுகயிற் றைக்கொடு எமனு முனைப்பிடிப் பானடா-மிகு
துயரம துற்றிடச் சதைசதை யைப்பொடிப் பானடா
கத்தாதே கழுதைபோல் அத்தானே அவனிமேல்
கலவிசெய் யச்சொல்லி யருகிலழைத்திடு மூடனே-நீதி
கருதி விடுத்தினி நடடா மடத்தன வேடனே
குற்றேவ லுக்குரிய முட்டாள் லீலைபுரிய
குவலய முற்றிலும் அவமதியைச்சொலு மேயடா-உன்
குலமும் நசித்திடும் எனைநீ விடுத்தகல் வாயடா.

வ-ம். அடே படுபாவி! என் தந்தை அண்ணன்மார்கள் நீ சொல்லிய வார்த்தைகளைக் கேட்டால், உன் மண்டையை இரு பிளவாக்கி, நாய் நரி முதலானவைகளுக்கு இரையாக்கி விடுவார்கள். அறிவில்லாதவனே! உனக்கு கெட்டகாலம் கிட்டிக்கொண்டதுபோலிருக்கிறது. அதனுல்தான் என்னிடத்தில் இவ்வித அசம்பாவிதமான மொழிகளை விடுத்து நிற்கிருய். மதியற்ற வேடனே! இனியேனும் இவ்விடத்தை விட்டு அகன்று போய்விடு!

---

விருத்தம்.

சுப். கைத்தலந் தனிலே வந்த கட்டிமாம் பழமே தேனே
சித்திரப் பதுமா யுந்தன் திருமேனி தன்னைச்சேர
எத்தனை துயரம் துன்பம் எனக்கு வந்தாலும் உன்னை
முத்தமிட் டணைந்து கூடிச் சுகிக்காது விடுவேனே

பாட்டு.

அருமா மறையோர்—என்ற மெட்டு.

மயிலே எனைநீ மருவா விடிலோ
மதனார் கணையா லுயி ரழிவேன்
அதனா லிதுவே னொயினி எனையே
அணைவா யெனில் நான் மிகவே மகிழ்வேன் (மயி)

அங்கம் நொந்து வருந்துகின்றது
அண்டி வந்து சுகங்கொடடி
அடமேன் விடுவா யிதமே மொழிவாய்
அழகார் முகமா மதி மாதரசே (மயி)

விருத்தம்.

வள். கள்ளுண்டு வெறியைக்கொண்ட கானவர் கையிற் சூலம்
முள்ளுண்டு ஈட்டியுண்டு முனையம்பு முண்டு நெஞ்சத்
துள்ளுண்டு கோபம்வந்திங் குனைக்கண்டால் சகியார் சென்னி
தள்ளுண்டு விழத்தரிப்பார் சாற்றினேன் ஓடிப்போடா.

வ-ம். அடே சண்டாளா! என் அண்ணன்மார்கள் வருகிற சப்தங் கேட்கிறது. அவர்கள் கையில் ஈட்டி, பாலா, சூலம், கத்தி, கட்டாரிகளெல்லாந் தயாராக வைத்துக்கொண்டிருப்பார்கள். நீ அவர்கள் கையிலகப்பட்டாயோ உன் சிரசைக் கொய்துவிடுவார்கள். ஓடிப்போய்விடு, அதோ வருகிறார்கள் பார்!

சுப். (தனிமொழி) இவளுடைய இனத்தார்கள் வருகிறார்கள். இந்தச்சமயம் நம்முடைய பலத்தைக் காட்டுவ தழகல்ல. அதற்குக் காலம் வரும். இப்போது ஒரு அற்புத லீலை காட்டுவோம்! (வேங்கைமரமாகிறார்)

---

(வள்ளியின் அண்ணன்மார்கள் வருகிறார்கள்.)

நம். குழந்தாய் வள்ளி! சௌக்கியமாக யிருக்கிறீர்களா? சந்தோஷமாகத்தானே யிரு. அம்மா இந்தப்பயிர்கள் இன்னும் ஒரு வாரத்தில் முதிர்ந்து பக்குவமாய்விடும். (வேங்கைமரத்தைப் பார்த்து) ஆஹா! என்ன ஆச்சரியம்! இந்த யிடத்தில் மரம் எப்படி யுண்டாயது? இதனால் தினைப் பயிர்கள் சேதமடையுமோ இதை வெட்டிவிடவேண்டும். அடே! இங்கேவா! (கவுளி சப்தத்தைக்கேட்டு) இதென்ன அதிசயமா யிருக்கிறது! குழந்தாய் வள்ளி! இந்தக்கவுளி சொல்லியதை நினைக்க இந்த மரத்தை வெட்டக்கூடாது. ஏனென்றால் நம்முடைய குலதெய்வத்தின் அருளால் உண்டானதுபோ லிருக்கிறது. நல்லது குழந்தாய், நாங்கள் அடுத்த காட்டில் வேட்டையாடப் போகவேண்டும். நீ சந்தோஷமாக யிரு.

(போகிறார்கள்.)

---

(வேங்கைமரமாகி நின்றவர் வேடரூபத்துடன் வந்து)

(பாட்டு தர்க்கம்.)

இராகம்-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி

சுப். ஆய லோட்டும் பெண்ணே அடி (ஆய)

அநுபல்லவி

ஆவியே என் னுருயிர்சஞ், சீவியே மன்மத னென்னும்
பாவியே மலர்க்கணைகள் தூவியே வாட்டுறான் வாராய்(ஆ)

பல்லவி

வள். மாய வேடா போடா அடா (மா)

அநுபல்லவி

மங்கையென்னிடத்தில்வந்து சங்கையில்லாவார்த்தைகளை
இங்கித மாகவேபேசி இங்குநிற்க லாகுமோடா (மா)

பல்லவி

சுப். பாயுந் தென்றலாலே அடி (பா)

அநுபல்லவி

பாங்கியே சித்தஜன் கணை ஓங்கியே தைத்த தால்மன
மேங்கியே வாடி னேன்மோக ஞங்கியே யெந்தனைக்காராய்(பா)

---

வ-ம். அடி மாதர் குலதிலகமே! எங்கேயோ பயந்து ஓடிவிட்டானென்று நினைத்தாயோ. கண்ணே! நான் இதைவிட்டுச் சென்றால் அங்கஜன் வளைத்துக்கொள்ளுகிறான். ஆகையால் பெண்ணே!

பாட்டு.

(எந்த வூரோ—என்ற வர்ணமெட்டு.)

சுப். ஆசை யுன்மேல் நான் கொண்டிட நீவெறுக்க லாமா
அஞ்சுகமே வஞ்சகம் செய் தால்ள்ளிதில் போமா

வள். காம மோக மேனுனக்கு நீயடைவாய் கேடு
கல்யாணஞ் செய்ய எண்ணுதல் நல்லதல்ல ஓடு

சுப். ஓடுவதற் காகவாநா னுன்னைத் தேடி வந்தேன்
உத்தமியே மாரன்விடும் வாளியினுல் நொந்தேன்

வள். மாரன்வாளி யால்மயங்கி மாதராசை கொண்டு
வார்த்தைபேசு வதினுலே ஏதுலாப முண்டு

---

வ-ம். அடே துஷ்டா! இதுநேரம் வரை எங்கேயோ ஒளித்துக்கொண்டிருந்து இப்போது வெளிப்பட்டாய்! என் தந்தை பார்த்தால் உன் கெதி எப்படி முடிந்திருக்கும்? ஏண்டா மறுபடியும் திரும்பிவந்து வீணான வார்த்தைகளைச் சொல்லுகிருய்? உனக்கு மான அவமானம் கொஞ்சம்கூட இல்லைபோலிருக்கிறதே!

(பாட்டு)

(இந்தக் கோபமேனடி) என்ற மெட்டு.

பல்லவி.

சுப். வேல்விழி மாதரசே—உனை
வேண்டி நின்றுங்கோபம் எண்டிகொண்டாய்பாபம்(வேல்)

அநுபல்லவி.

ஆல்மிசை தாங்கும் அரிமகன் வில்லேந்தி
அஞ்சுமல ரம்புவிட நெஞ்சுதுளை யுண்டதடி
பெண்கள் தொழில் வஞ்சமில்லை அம்புபுரி கஞ்சமுக (வேல்)

ஒத்துக்கு மத்தாளம்போல் தென்றலுங் கூடி
உள்ளேபுகுந்தென்னுயி ருண்ணலா மோடி
பித்துக்கு மாறாய் மருந்து மில்லை யோடி (வேல்)

வ.ம். பெண்ணே! உன்னையடைவதைப் பார்க்கிலும் இந்த ஜீவனைப் பெரிதாக நினைக்கமாட்டேன். மான அவமானம் கவனிக்க மாட்டேன். முறையாக நீ என் மனம்போல் இணங்காவிடில் மேல் காரியம் நடக்கும்? கண்ணே மனமிரங்குவாய்.

தர்க்கம்.

இராகம்-எதுலகாம்போதி-ரூபகதாளம்.

சுப். அன்னமே ஓ செழுந் தேனே
உன்னுசையா லிங்குவந் தேனே
அம்புவி மாதே வம்புசெய் யாதே
அணங்கன் தானே சினங்கொண் டானே
ஆகையால் நானே மோகங்கொண் டேனே
அடியே கொடியே மருவிட (அன்)

வள். இன்னமும் ரோஷமில்லையா எங்கே யாகிலும் சொல்லையா ஈனமூடா கானவேடா ஏழமை போலே தோழிமாராலே எதியும்போகா தோஷியே நீதான் எத்தா பித்தா சரியல
(இன்)

---

வம். அடேவேடா! அதோ! எனது தந்தை முதலானவர்கள் வேட்டையாடிக்கொண்டிருக்கிறார்கள். நீ மரியாதையாகப் போகிறாயா அல்லது அவர்களை அழைத்துவரச் சொல்லட்டுமா?

சுப். பெண்ணே! வருத்தப்படாதே! நான் போய்வருகிறேன். (தனிமொழி) இவள் முன்னே பஞ்சை போல் சுற்றிச் சுற்றி வந்து மட்டு மிஞ்சி கெஞ்சியும், ஒரே சாதனையாகப் பேசி விட்டாள் என்ன செய்வது? நாரதரோ நம்மைப் பெருமையாக நினைத்து இவளிடம் சபதம் செய்து வந்துவிட்டார். நல்லது சமீபத்தில் வேட்டையாடிக்கொண்டிருக்கும் நம்பிராஜனிடம் செல்வோம்.
[வேடனாக நின்ற முருகன் இவ்வுருவை மாற்றி கிழட்டுவுரு வெடுத்துக்கொண்டு மீண்டும் நம்பிராஜனிடம் செல்லுகிறான்.]

---

## 10-வது களம்.

### மரம் நிறைந்த பொழில்.

நம்பிராஜனும் புத்திரர்களும் அமர்ந்திருக்கிறார்கள்.

---

புத். பிதா! சமீபத்தில் யாரோ ஒரு வயது சென்ற கிழவர் வருகிறார் போல் தெரிகிறது.

நம். புத்திரர்களே! அழைத்துக்கொண்டு வாருங்கள்.

[தள்ளாடிய கிழவர் வந்துவிட்டார்.]

நம். சுவாமி! நமஸ்காரம். இவ்வளவு முதிர்ந்த காலத்தில் இந்த வழிவந்த காரணம் யாது? அடியேனுக்குத் தெரிவிப்பீர்.

கிழ. அப்பா! நீ மங்களமாயிருக்கவேண்டும். நான் காசியிலிருந்து வருகிறேன். தற்சமயம் கன்னியாகுமரிக்குப் போய்த் தீர்த்த மாடவேண்டும். வழிதெரியாததால் திகைத்து நிற்கிறேன். இதுதான் எனது சவிஸ்தாரம். தளர்ந்த வயதானதால் எனக்குத் தாகமும், பசியும், அதிகரிக்கின்றன. என்ன செய்யப் போகின்றேனே தெரியவில்லை.

நம். சுவாமி! கவலைப்படவேண்டாம். சமீபத்திலுள்ள ஒரு வனத்தில் எனது புத்திரியாகிய "வள்ளி" யென்னும் ஒரு பெண், பறவை விரட்டி விளையாடிக்கொண்டிருக்கிருள். தங்களை அவளிடம் ஒப்புவித்து தங்களுக்கு வேண்டிய உணவு முதலியவைகளைத் தரும்படி செய்யலாமென எண்ணுகிறேன். தங்களிஷ்டம் யாதோ?

கிழ. உன்னிஷ்டப்படியே செய்து முடிப்பாய். இதுமுதல் உன் குடும்பம் தழைத்தேற ஆசீர்வதித்தேன்.

நம். புத்திரர்களே! வாருங்கள் போகலாம். சுவாமி எழுந்தருளும், [கிழவன் கோலை ஊன்றிக்கொண்டு தள்ளாடித் தள்ளாடி நடக்கின்ருர்.]

---

## 11-வது களம்.

## தினைப்புனம்.

[வள்ளி பரண்மீதிலமர்ந்திருக்கிருள்.]

நம். வள்ளிக்கொடியே! இப்பெரியவரை வணங்கி ஆசீர்வாதத்தைப் பெற்றுக்கொள்.

வள். சுவாமி! நமஸ்கரிக்கின்றேன்.

கிழ. வள்ளி! நீ சீக்கிரத்தில் நல்ல கணவனை யடைவாயாக.

வள். தாத்தா! அமர்ந்துகொள்ளுங்கள்.

கிழ. இருக்கிறேன். என்னருகில் வா.

நம். குழந்தாய்! இந்தப் பெரியவரை உனக்குத் துணையாக வைத்துக்கொள். அவருக்கு வேண்டும்போது நல்ல அறு சுவை நிறைந்த உணவளித்து அன்புடன் ஆதரித்து வர வேண்டும் கண்மணி! நாங்கள் சென்று வருகிறோம்.

வள். சென்று வாருங்கள்.

நம். சுவாமி! குழந்தையைப் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்.

கிழ. நீங்கள் சென்று வாருங்கள்.

[நம்பிராஜன் தன் புத்திரர்களுடன் சென்றுவிட்டான்.]

வள். தாத்தா! தாங்களிருப்பது எந்தவூர்? இப்பொழுது எந்த ஊருக்குப்போக இந்தவிடத்திற்கு வந்தீர்கள். உங்கள் தாடி ஏன் வெள்ளையாகயிருக்கிறது? அது உங்களுக்கு கஷ்ட மாக விருக்கவில்லையா?

கிழ. உனக்கு எல்லாம் கஷ்டந்தான். தாடியுங் கஷ்டந்தான். வாடி யென்றால் கஷ்டந்தான் உனக்கென்ன குமரி.

---

மாபாவி யோர்குடி வாழும்—என்ற மெட்டு.

கண்ணிகள்.

கிழ. ஆருக்கு வந்த விருந்தென்று நீமதி
யாம விருக்கிறாய் பெண்ணே

வள். உமக் கானதைக்கேளு மடியாள் பணிவிடைக்
காளா யிருக்கிறேன் ஐயா

கிழ. மெத்தப் பசிவந்து சித்தங் கலக்கிநான்
இத்தருணம் நொந்தேன் பெண்ணே

வள். இத்தருணத் தேனுந் தினைமாவு தருகிறேன்
தின்று பசியாறு மையா

வள். தாத்தா! பசி தீரும் பொருட்டு இதோ சென்று தேனும் தினைமாவும் பிசைந்து தருகிறேன்.

கிழ. உன்னிஷ்டம்போல செய்.

[வள்ளி ஒரு பாத்திரத்தில் தினைமாவுடன் தேனைக் கலந்து பிசைந்து, பெரியவருக்குக் கொடுக்கிறாள். கிழவர் தின்றுகொண்டிருக்கையில்]

பாட்டு முன்தொடர்ச்சி

கண்ணிகள்

கிழ. நஞ்சைக் கலந்திங்கு தின்னென்று தந்தாயே
ஞாயமோ சொல்லடி பெண்ணே

வள். நல்லதைச் செய்திட பொல்லாங்கு நேர்ந்தது
நானென்ன செய்குவேன் ஐயா

கிழ. வ-ம் வள்ளி! தினைமாவைத் தந்து என் தொண்டை விக்கி,

கண்ணிகள்

கிழ. தண்ணீர் தவிக்குது உள்நாக் குளறுது
தாகமதைத் தீர்ப்பாய் பெண்ணே

வள். தண்ணீ ரருந்திட வாருஞ் சுனையோரம்
கண்ணீர் விடுக்காது இன்று

கிழ. காணும் வரைவழி சோம்பாம லேஎந்தன்
கைபிடித் தேகிடு பெண்ணே

வள். வ-ம். தாத்தா! வாருங்கள் போகலாம். இந்தக் கம்பைப் பிடித்துக் கொள்ளுங்கள்.

கிழ. வ-ம். ஏ வள்ளி! எனக்குக் கம்பைப் பிடித்துக்கொள்ளச் சக்தியில்லை. நீ என் கையைப் பிடித்துக்கொள் நான் வருகிறேன்.

[வள்ளி கிழவருடைய கையைப் பிடித்துக் கூட்டிக் கொண்டு போகிறாள்]

## 12-வது களம்.

### நீர் நிறைந்த கேணி.

வள். வ-ம் தாத்தா! இந்தகேணியிலிறங்கி தண்ணீர் அருந்துங்கள்.

பாட்டு

முன் தொடர்ச்சி.

கண்ணிகள்.

கிழ. நீர் நிறைந்த மடு ஓரங் கூட்டிவந்து
கொல்ல நினைத்தாயோ வள்ளி

வள். கொல்ல நினைத்தும்மைக் கூட்டி வரவில்லை
மெல்ல குடித்தேறு மையா

கிழ. வள்ளிக் கொடியேஎன் கையில் தடிகொடு
அள்ளிக் குடிப்பேன் மானே

வள். இம்-மடியைப் பிடித்துநீர் மடுவிலிறங்கிடும்
படியோரம் தெரியுது ஐயா

கிழ. அப்படியானால் சரிதான், வள்ளி! என்னருகில்வா. . [இப்படி இருவருமாக விளையாடி, முடிவில் மடுவில் நீரருந்தியவர் கால்தவறியவர்போல் பாவனைகாட்டி தண்ணீர் நிறைந்த மடுவிலிருந்து சொல்லுகிறார்.]

மத்தினமே மோர்—என்ற மெட்டு

பல்லவி.

கிழ. இந்தக்—கிணத்திலே ளைத்தள்ளவா
அழைத்து வந்தாய்
வள்ளி— அழைத்துவந்தாய் (கி)

அநுபல்லவி.

இத்தினம் நானே நத்திவந்தேனே
சித்தினியே நீதியாமா ஓடிடுவாய்
வள்ளி ஓடிடுவாய் (கி)

வள். நிந்தனைசொல்லி எந்தனைத் தள்ளி
கையைப் பற்றி ஏறுவீர் கரை யோரமே
கிழவா கரை யோரமே
இது நல் நேரமே (க)

கிழ. வள்ளி! இப்படிச்செய்ய எத்தனை நாளாய் நினைத்திருந்தாய்! நான் உனக்குச்செய்த கொடுமை யென்ன? இந்த நரைத்த கிழப்பழத்தைக் கொல்லுவதற்கு இதுதான் சரியான தந்திரமென்று செய்தாயா? உன் கையைக்கொடு பிடித்துக்கொண்டு மெள்ள மெள்ளக் கரையேறுகிறேன்.

வள். தாத்தா! என் கையைப் பிடித்துக்கொள்ளுங்கள், நான் வெளியே இழுத்து விடுகிறேன்.

கிழ. உன்னிஷ்டம்போல் செய்.
[வள்ளியின் கையைப்பிடித்துக் கொண்டு கிழவன் கரையேறிவிட்டார்.]

பாட்டு.

கிழ. தாக விடை தீர்த்தாய் மோகவிடை தீர்ப்பாய்
தண்ணீ ரோரம்வந்த பெண்ணே.

வள். தாடி நரைத்த கிழவரென் றெண்ணினேன்
வாடியென்று சொல்ல லாமா.

கிழ. மோடி செய்யவேண்டாம் வாடி யென வேண்டாம்
தாடி யொரு முத்தம் பாடி

வள். ஓடிநீர்போய்விடும் உயிரையுங் காத்திடும்
உளறிக்கொட்ட வேண்டாம் கிழவா

வ-ம். நீர், பழுத்த கிழவனென்று பரிதாபப்பட்டேன். இவ்வளவு தூரம் பேசுவீரென்று முன்னமே தெரிந்திருந்தால் உம்மோடு இவ்வளவு நேரம் பேசியிருக்கக்கூட மாட்டேன். இருக்கட்டும்?

கிழ. என்ன தெரிவித்தாய்? நீ இதைவிட எவ்வளவு தூரம் எடுத்துரைத்தாலும் நான் பயப்படுவேனென்று எண்ணாதே.

பாட்டு

(சல்லாப லீலை செய்வோம் என்றமெட்டு)

கிழ. ஒரு முத்தந் தந்திடுவாய்
உத் தமி மாதே

வள். சித் தமும் வீணுகுதே
பித்தமோ பேதே

கிழ. பத் தினி மாதே
பகர் வா யிப் போதே

வள். அறிவில்லாத் தீதே
அகல்வீர் தப் பாதே

கிழ. ஆவியுன்னைச் சேர்ந்தணைய
ஆவல்கொண் டேனே

வள். நாவியென்று எண்ணி நொந்தேன்
நாடாதீர் தாமே

கிழ. தாமதஞ் செய்யாதே

வள். வாய் மதம் பேசாதே

கிழ. சோ தனை செய்தேனே

வள். வே தனை உய்தேனே

கிழ. வந்திடுவாய்க் கோபந்தள்ளி
வருந்தவேண்டாம் வள்ளியே

வள். நடந்திடுவீர் நீர்விரைந்து
மார்க்கமதில் நாடியே

கிழ. வள்ளிக்கொடியே! உன்னைச் சோதித்தேன். என் மீது கோபித்துக்கொள்ளாதே! தளர்ந்து நரைத்த. எனக்குப் பெண்டாட்டியும் வேண்டுமோ? இது தான் சிறுபிள்ளைத் தனம். என்னமெல்லாமோ உன் வாயில்வந்தபடி யெல்லாம் பேசிவிட்டாய். இருக்கட்டும், இவ்விடத்தில் நாமிருந்தால் ஏதாவது மிருகங்கள் வந்து நம்மைத் தொந்தரவு செய்யும். ஆனதால் போகலாம் வா.

வள். உமக்கு மிருகத்தைக் கண்டாற் பயமாயிருக்கிறது. எனக்கு மிருகத்தைக் கண்டால் சந்தோஷம் உண்டாகும்.

கிழ. நீ மிருகத்தைக் கண்டால் பயப்படுகிறதில்லையா?

வள். எப்படிப்பட்ட மிருகங்களாயிருந்தாலுஞ்சரி, பயப்படுகிறதில்லை. ஒரு மிருகமிருக்கிறது. அதற்குத்தான் பயப்படுவேன். அந்த மிருகம் இந்தக் காட்டிலே கண்டிப்பாய் கிடையாது.

கிழ. அதென்ன புலியா?

வள். இல்லை

கிழ. சிங்கமா?

வள். இல்லை.

கிழ. மானா?

வள். இல்லை.

கிழ. கரடியா?

வள். இல்லை.

கிழ. யானையா?

வள். தாத்தா அதுதான்.

கிழ. ஏ வள்ளி! நான்தான் சிறிதுநேரத்திற்கு முன்னாலே ஒரு பெரிய யானை, ஒரு பெண் யானையைத் துரத்திக் கொண்டு போகப்பார்த்தேனே!

வள். இந்தக் காட்டிலா? யானையைக் கண்டீர்?

கிழ. நாம் இந்தக் காட்டில்தானே இருக்கிறோம்.

வள். சரி வாரும் போகலாம்.

கிழ. சரி சரி! [இப்பொழுது தான் வள்ளி என் வலையிற் சிக்கினாள். சகல விஷயங்களுக்கும் முதற்கடவுளாகிய எனது

அண்ணாவை "யானை" உருவாக வரச்சொல்லி இந்த வள்ளியை காந்தர்வ விவாஹம் செய்து கொள்ளுகிறேன்.]

பாட்டு

இராகம்- ஆனந்த பைரவி தாளம்-ஆதி,

பல்லவி.

கிழ. சோதரரே வருவீர்
யானையாய்த் தெரிவீர்
உதவி செய்குவீர்
சுகந்தருமொழி யிவள்முன்னே (சோ)

அநுபல்லவி

மாதரசி யானை மாமணம் புரிய
கோரி நானுமுனை கும்பிட்டழைத்தேனிங்கு (சோ)

வ-ம். அண்ணா! இந்த வள்ளியின் முன்னிலையில் பெரிய யானையாகவந்து பரிகாசஞ் செய்யும்படி பணிவுடன் தொழுது நிற்கிறேன்.

## யானைமுகத்தான் காட்டானையாக வருதல்.

வள். தாத்தா! நான் என்ன செய்யப்போகிறேன், இதோ பாரும்! எனக்கு பயமாயிருக்கிறதே! ஐயோ! என் தாய் தந்தையரையுங் காணவில்லையே! தாத்தா! தாத்தா!!

[வள்ளி இப்படிச் சொல்லிப்பயந்து நடுநடுங்கி கிழவனைக் கட்டிப்பிடிக்கிறாள்.]

கிழ. வள்ளி! என்னைத்தொடாதே. நானோ ஏழைக்கிழவன். யானையின் துதிக்கையில் என்னைத் தள்ளிவிடலாமென எண்ணுகிறாய் போலும்.

வள். ஆபத்துக்காலத்தில் கைவிடலாமா?

கிழ. இந்த யானையைப் போகும்படி செய்கிறேன். என்னை விவாகஞ்செய்து கொள்ளுகிறாயா? சொல்.

வள். இந்த யானையினின்று நீர் காப்பாற்றினால் உம்மை மணந்து கொள்கிறேன்.

கிழ. அப்படியானால் உன்குல தெய்வத்தின்மீது சத்தியஞ் செய்து தரவேண்டும்.

வள். என்வாயினாற் சொன்னால் போதாதா?

கிழ. உன்குலதெய்வத்தின்மீது சத்தியஞ்செய்துதான் தர வேண்டும். அப்படியானால் இந்த யானையைப் போகும்படி செய்கிறேன். இல்லாவிட்டால் உன் பாடு யானையின் பாடு.

[யானை வள்ளியினருகில் வந்து விட்டது]

வள். தாத்தா!யானையைப் போகும்படி செய்யும். சத்தியஞ் செய்து தருகிறேன்.

கிழ. யானையே நீ போய் வா.

[யானை மறைந்துவிட்டது.]

வள். தாத்தா! உம்மை எய்த்து விட்டேனே.

கிழ. எய்த்துவிட்டாயா? யானையே!ஓடிவா.

[மீண்டும் யானை திரும்பி விட்டது]

வள். தாத்தா! இதென்ன சங்கடமாயிருக்கிறது. உம்மைக் கலியாணஞ் செய்துகொள்ளுகிறேன். யானையைப் போகச் சொல்லும்.

கிழ. சத்தியஞ்செய்து கொடு. யானை போய்விடும்.

வள். தாத்தா! எங்கள் குலதெய்வமாகிய குமரேசன்மீது ஆணை யாக உம்மை மணந்து கொள்கிறேன்.

[யானை போய்விட்டது.]

[கிழவர் மறைந்து விட்டார்]

[வள்ளி கிழவனுக்கு மணந்துகொள்கிறேனென்று சத்தி யஞ்செய்து கொடுத்தேனே யென்று புலம்புகிறாள்.]

(அடைக்கலமே என்றமெட்டு)

பல்லவி.

வள். வேல வனே வேல வனே
கோலாகல முடனே
நீலமயின் மீதேறும் (வே)

அநுபல்லவி

தாடி மீசை நரைத்த கிழவனைத்தொட்டு
கூடி மணந்திருக்க சம்மதப் பட்டு
வாடி மனமுந்நொந்தேன் பேதைநான்கேட்டு
வாயாடி சத்தியஞ் செய்தேன் மானமும் கெட்டு (வே)

தேவர்கள் புகழ்ந்திடும் அறுமுக நாதா
தினந்துதி செய்தேன்நான் தாமரைப் பாதா
இந்த வேளை வந்தருள் தந்திடும் போதா
இருகரங் குவித்தேன் நான் தெரிசனந் தாதா (வே)

வள். சுவாமி! உம்மையே மணந்து கொள்ளவேண்டு மென்ற எண்ணத்தோடு இரவு பகலா யெண்ணியிருந்தேனே. இப்பொழுது என் மனம் வாதையடைகிறதே! ஹா!

[கிழவராயிருந்தவர் ஆறுமுகம் பன்னிரு கரங்களோடு வேல் பிடித்தவராய் வந்து]

சுப். வள்ளியே! அஞ்சேல்! அஞ்சேல்! உன்னிடம் சத்தியம் வாங்கினவன் நானே. உன் பக்தியை அறியுமாறு இவ் வித சம்பவங்களையெல்லாம் செய்தேன். என்னருகில் வா. [வள்ளி சுப்பிரமணியக் கடவுளைத் தெரிசித்து அருகிற் செல்லுகிறாள்.]

வள்ளிக்கும் கந்தனுக்கும் காந்தர்வ விவாகம் நடக்கிறது.

[தேவர்கள் பூமழை சொரிகிறார்கள்.]

[இந்தச் சமயத்தில் நம்பிராஜனும் அவன் புத்திரர்களும் வருகிறார்கள்.]

வேலனுக்கும் வேடருக்கும் சண்டை

[வேடர்கள் மடிந்துவிட்டார்கள். வள்ளி தன் தந்தையும் சகோதரரும் இறந்துவிட்டதைப்பற்றி புலம்புகிறாள்.]

(ஆகா நான் என்ன செய்வேன் என்ற மெட்டு.)

வள். ஐயா நீர் மடிந்தீரோ அடியோடு சாய்ந்தீரோ
அறுமுகன் என் றறிந் தீரோ
தெய்வமே தெய்வமே தெய்வமே.

வ—ம். சுவாமி! இவர்தான் என் தந்தை, இவர்கள் என் அண்ணன்மார்கள். அவர்கள் செய்த பெரும் பிழையைப் பொறுத்து முன்போல் ரக்ஷிக்கவேண்டும்.

[இறந்தவர் முற்றும் உயிருடனெழுந்து முருகனைத் தொழுதார்கள்.]

கொச்சி மலை என்றமெட்டு

நம். நீல மயி லேறி வரும்
வேல வரே வாரும்
நல்ல வரமுந் தாரும்
இந்த-பாக்யவதி வள்ளியுடன்
கழுகாசலஞ் சேரும். (நீ)

நம். சுவாமி! இச்சிறியோர் உம்மை இன்னாரென்றுணராமல் உளறியதற்குத் தண்டனை போதுமானது. எங்கள் நாடும் குடும்பமும் தழைத்தேறும்படி நல்ல வரந் தரும்படி உமது பாதத்தைப் பணிந்து நின்றோம்.

சுப். தந்தேன்! சென்று வாருங்கள்.

## 13-வது களம்.

## திருக்கழுகுமாமலை.

சாக்ஷாத் ஸ்ரீசிவசுப்ரமணியக் கடவுள் வள்ளி தெய்வானையம்மை சமேதராய் முப்பத்து முக்கோடி தேவர்கள் சூழ நீலமயின் மீது ஆரோகணித்து இருக்கிறார்.

(இந்த வேளையில் நாரதர் எழுந்து)

நார. முருகா! இம்மாதிரி சம்பவத்தை நீண்டகாலமாக எதிர்பார்த்திருந்தேன். இன்று தான் என் மனமும் தேவர்கள் மனமும் குதூகலமடைந்தன.

சுப் தேவர்களே! சென்று வாருங்கள்.

வள்ளியம்மை சரித்திரம்.

சம்பூர்ணம்.

---